REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE : 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: ஆவணி 13உ திங்கள் (29—8—55) ★ ★ வெளியூர்: ஆவணி 14உ செவ்வாய் (30—8—55) [இதழ் 65

## ரூ. 130 கோடி செலவில் கைத்தறித் துணி உற்பத்தி

புனா, ஆக. 28—

"இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ், 300 கோடி கெஜம் கைத்தறித் துணி ரூ 130 கோடி செலவில் உற்பத்தி செய்யப்படும்," என்று கிராமத் தொழில் உதவி அதிகாரியான சுப்பிரமணியம் என்பவர், கைத்தறி அதிகாரிகள் மாநாடு ஒன்றில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

"அகில இந்திய கைத்தறி போர்டு, 300 கோடி கெஜம் துணி உற்பத்தியை அங்கீகரித்திருக்கிறது" என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

# 'உரிமை முரசு' கேட்டு உள்நாட்டு மந்திரி நடுக்கம்

## 'பிரிவினை இயக்கம் மத்திய ஆட்சியை பலவீனப்படுத்துவதாகும்'

## 'இந்தி எதிர்ப்பும் அத்தகையதே!'

## 'இந்த ஆபத்தான சக்திகளை ஒழிக்க வேண்டும்'

*உள்நாட்டு அமைச்சர் பண்டித பந்த் ஓலமிடுகிறார்!*

"மத்திய ஆட்சியை பலவீனப்படுத்துகிற சக்திகள், இயக்கங்கள் இந்த நாட்டில் இடம் பெற்றிருக்கின்றன ;

"வகுப்புவாதம், சாதி வெறி, மொழி வெறி, வடநாடு—தென்னாடு என்று வேறுபடுத்திப் பேசுவது, தேசீய மொழியான இந்தியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்வது முதலியன அந்த ஆபத்தான சக்திகளாக விளங்குகின்றன ; இந்த ஆபத்தான சக்திகளை ஒழிக்க மக்கள் ஒன்றுபட வேண்டும் ;

"தென்னாட்டிற்கும்—வடநாட்டிற்கும் எந்த வகையாலும் வேறுபாடு இருப்பதாகக் கூறுவதற்கு நியாயமே இல்லை ;

"ஏதாவது ஒரு வேலையைத் துவங்க வேண்டுமானால், அதனை நாட்டின் ஏதாவது ஒரு பகுதியில் துவக்கித்தானாக வேண்டும்; ஏதேனும் ஒரு ஆக்க வேலை, இயக்கம் வடநாட்டில் துவங்கப்பட்டால், அதனாலேயே தென்னாடு புறக்கணிக்கப்படுகிறது என்பது பொருளல்ல ; அதேபோல, தென்னாட்டில் துவங்கப்பட்டால் வடநாடு புறக்கணிக்கப்பட்டதாகாது ;

"ஐதராபாத்தில் ஒரு 'ராஷ்டிரபதி நிலையம்' ஏற்படுத்தியிருப்பது, தென்னாடு புறக்கணிக்கப்படவில்லை என்பதற்கு ஒரு நல்ல எடுத்துக் காட்டாகும்—உதாரணமாகும்,"

*என்று, மத்திய உள்நாட்டு மந்திரி பண்டித பந்த், ஐதராபாத் காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.*

*மேலும் அவர் பேசியதாவது :—*

*"இந்தி தேசீய மொழியாக ஆக்கப்பட்டது, அது வேறு இந்திய மொழிகளைக் காட்டிலும் உயர்ந்த மொழி என்பதினால் அல்ல ;*

*"அரசியல் சட்டத்தை உருவாக்குகிற நேரத்தில் இருந்த பிரச்சினை எல்லாம், அகில இந்திய உபயோகங்களுக்காகவும், மத்திய அரசாங்க அலுவல்களுக்காகவும், ஏதேனும் ஒரு இந்திய மொழியை தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதுதான் ;*

*"இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு ஆங்கிலம் எப்படி இந்தியாவின் தேசீய மொழியாக இருக்க முடியும் ?*

*"எனவே, தேசீய மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள இந்தி மொழியை எதிர்ப்பது, மத்திய ஆட்சியைப் பலவீனப்படுத்துவதாகும் ;*

*"நிர்வாக வசதி கருதி, ஒரு வட்டத்தை மற்றொரு மாவட்டத்துடன் இணைப்பதை மக்கள் எதிர்க்கமாட்டார்கள் ; அதே போல, மாநிலங்களை நிர்வாக வசதி கருதி—மாநில புனரமைப்புக் குழுவின் சிபாரிசுகளின்படி திருத்தியமைத்தால், மக்கள் அவற்றை எதிர்க்கக்கூடாது."*

## 'தமிழ்ப் பகுதிகள் தாய்த் தமிழ் மாநிலத்தில் இணைந்தே தீரும்'

### நேசமணி உறுதி கூறுகிறார்

*"திரு-கொச்சியில் உள்ள ஒன்பது தமிழ் தாலுகாக்களும் தாய்த் தமிழகத்துடன் இணைந்தே தீர வேண்டும். மாநிலபுனரமைப்புக்குழுவின் சிபாரிசுகள் என்னவாயிருந்த போதிலும், அவை தமிழகத்துடன் இணையச் செய்வதற்காக, திரு-தமிழ் நாடு காங்கிரஸ் எல்லா முயற்சிகளையும், மேற்கொள்ளும்" என்று தி. த. நா காங்கிரஸ் தலைவர் நேசமணி தெரிவித்திருக்கிறார்.*

*தனக்கு மாநில ஆட்சியில் மந்திரி பதவி கிடைக்கப்போவதாக வெளிவந்த செய்திகள் குறித்து கேட்கப்பட்டபோது, 'அது ஒரு குறும்புத்தனமான வதந்தி' என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார்.*

## நாளை !

மதுரை தியாகராயர் கல்லூரி இளங்கோ மன்றத்தில் அண்ணா ஆற்றிய பேச்சு வெளிவரும்.

## தொழிலாளர் மீது போலீசார் தடியடி

### பலர் கைது: ஆறு பேர்களுக்குக் காயம்

*கல்கத்தா, ஆக. 27—*

*ஹௌரா வட்டத்தில் சணல் ஆலை ஒன்றின் அருகே வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் ஆலைத் தொழிலாளர் மீது போலீசார் தடியடிப் பிரயோகம் செய்திருக்கின்றனர்.*

*அந்தத் தொழிலாளர்கள், போலீசார் மீது 'தாக்குதல்' நடத்திய நிலையிலேயே போலீசார் தடியடிப் பிரயோகத்தில் ஈடுபட்டனராம்.*

*சுமார் ஆறுபேர்களுக்கு காயம் பட்டதாயும், பலர் கைது செய்யப்பட்டனர் என்றும் கூறப்படுகிறது.*

*அந்த வட்டத்தில் உள்ள இரண்டு போலீஸ் நிலையப் பகுதிகளில் 144 தடையுத்தரவுச் சட்டம் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.*

*தொழிலாளர் அரசாங்க இன்ஷூரன்ஸ் திட்டத்திற்கென தங்களின் சம்பளத்திலிருந்து பணம் எடுப்பதை எதிர்த்து சணல் ஆலைத் தொழிலாளர்கள், கடந்த வியாழனிலிருந்து வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டிருப்பது தெரிந்ததே!*

## 'வட நாடு தென்னாட்டின் மீது ஆதிக்கம் செலுத்தவில்லையாம்'

### திராவிட நாடு வேண்டுமென்போரே அவ்வாறு கூறுகின்றனராம்!

*சென்னைக்குக் கிடைத்த பங்கு நியாயமானதாம்!*

### 'ஆளப்படுகிறோம்' என்ற தாழ்வு மனப்பான்மை கூடாதாம்!

### சென்னை சட்டசபையில் மந்திரி சுப்பிரமணியம்

"இரண்டாம் திட்டம் மக்கள் தொகை அடிப்படையில் அமையுமானால், நமது மாநிலத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை நியாயமானதே ;

"மாநிலத்தின் திட்டங்களைப் பொறுத்த வரையில், நமக்கு நியாயமான பங்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றே சொல்ல வேண்டும்—இன்னும் கொஞ்சம் அதிகமான அளவு நமக்குத் தரப்பட வேண்டியிருந்தாலுங்கூட; அது பற்றி இன்னும் பரிசீலனை நடைபெறுகிறது ;

"தென்னாட்டின் மீது, வடநாடு ஆதிக்கஞ்செலுத்துவதாக சில உறுப்பினர்கள் குறைபட்டார்கள்; இந்த உறுப்பினர்கள், தென்னாட்டை யாரோ சில 'வெளிநாட்டவர்' ஆளுவதாகவும், எனவே, சுதந்திர திராவிட நாடு அமைக்க வேண்டும் என்றும், அப்போது தான் தென்னாட்டிற்கு உகந்த திட்டங்கள் தீட்டப்பட முடியும் என்றும் நம்பிக்கொண்டிருப்பவர்கள் ;

"தென்னாடு புறக்கணிக்கப்படுவதாகவோ, தென்னாட்டின் மீது வடநாட்டவர் ஆதிக்கஞ் செலுத்துகிறார்கள் என்றோ எவரும் அஞ்சத் தேவை இல்லை ;

"நமது மாநிலத்தில் இருப்பவர்கள் எல்லாம், உறுதியான மக்கள் ; மத்திய அரசாங்கமோ, திட்டக் குழுவோ, நமது கோரிக்கை நியாயமானவையாக இருப்பின்—அவற்றைப் புறக்கணித்துவிட முடியாது ;

"நமது உரிமைகளைப் போராடிப் பெற நமக்கு வலுவிருக்கிறது ;

"நாம் வடநாட்டவரால் ஆளப்படுகிறோம்—என்ற தாழ்வு மனப்பான்மை நமக்கு எழக்கூடாது ; நமது உரிய பங்கினைப் பெறுவதற்கு, நமக்குப் போதுமான அளவு பலம் இருக்கிறது ; நமது அறிவைத்தான் பலம் என்று குறிப்பிடுகிறேனே தவிர, உடல் வலிமையை அல்ல,"

*—என்று, சென்னை மந்திரி சுப்பிரமணியம் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டங்கள் பற்றிய விவாதத்திற்கு சட்ட சபையில் பதில் கூறுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.*

## 'டிராலி பஸ்' விட திட்டம் தருக!

*சென்னை சர்க்காரிடம் டில்லி கேட்கிறது*

*புதுடில்லி, ஆக. 28—*

*டிராம் வண்டிகளுக்குப் பதிலாக அல்லது குறிப்பிட்ட சில இடங்களில் மட்டும் டிராம்களுக்குப் பதிலாக 'டிராலி பஸ்' விடுவதற்கு தனியாகத் திட்டங்களைத் தயாரித்து அனுப்புமாறு சென்னை, பம்பாய் மாநில சர்க்கார்களுக்கு மத்திய போக்குவரத்து இலாகா உத்தரவு அனுப்பியுள்ளதாம்.*

*இந்தத் திட்டங்களின் அடிப்படையில், 'பெட்ரோல்' அல்லது 'டீசல்' எண்ணெய் இவற்றில் எதனைக்கொண்டு 'பஸ்' ஓட்டுவது பலிவானது என்பதை முடிவு செய்ய உத்தேசிக்கப்பட்டிருக்கிறதாம்.*

*பெங்களூரில் மின்சார டிராலி ஓட்டுவதற்கு, மைசூர் மாநில சர்க்கார் திட்டக் குழுவிடம் திட்டம் ஒன்று தாக்கல் செய்திருப்பதாகத் தெரிகிறது.*

*புதுடில்லி, ஆக. 28—*

*கால்நடை இன்சூரன்ஸ் திட்டமொன்றை, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், பரீட்சார்த்தமாகச் சேர்க்கும் யோசனையை திட்டக் குழுவுக்கு மத்திய உணவு இலாகா சிபாரிசு செய்துள்ளதாம்.*

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

*தலைமைக் கழகம் : அறிக்கை—27/55*

## தி. மு. கழக ஆண்டு விழாவும்—நாட்டுப் பிரிவினை வாரமும்

திராவிட முன்னேற்றக் கழகம் தோற்றங்கொண்டு, ஆறு ஆண்டுகளைக் கடந்து, ஏழாவது ஆண்டில் அடி எடுத்துவைக்கும் பெருமைகொள் விழா 17—9—55-ஆம் நாளன்று நடைபெறவிருக்கிறது.

17—9—55-ஆம் நாளிலிருந்து 23—9—55-ஆம் நாள் வரையிலுள்ள ஒரு வார காலத்தைத் திராவிட நாடு பிரிவினை வாரமாகக்கொண்டு, தி. மு. கழக ஆண்டு விழாவை மிகச் சீரிய முறையில், ஆங்காங்குள்ள தி. மு. கழகக் கிளைகளும், தி. மு. கழகத்திற்குச் சார்புடைய அமைப்புகளும் கொண்டாடுவனவாக!

தி. மு. கழகக் கொள்கைகளை விளக்கியும், கழகம் ஆற்றிய தொண்டுகளை எடுத்துக்கூறியும், திராவிட நாட்டுப் பிரிவினைத் திட்டத்தை வலியுறுத்திச் சொல்லியும் துண்டு அறிக்கைகள் வெளியிட்டு—தட்டிகள் எழுதி வைத்து—ஊர்வலங்கள் நடத்தி—பொதுக்கூட்டங்கள் கூட்டிக் கழகத் தோழர்கள் கொண்டாடுவார்களாக!

இயன்றால் கொள்கை விளக்க இசையரங்குகளும்—நாடகங்களும் இலவசமாக நடத்திக்காட்டுவார்களாக!

"அறிவகம்," சென்னை 27-8-1955

**இரா. நெடுஞ்செழியன்,**
பொதுச்செயலாளர், தி. மு. கழகம்

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

நம் நாடு
தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 29—8—'55 திங்கள்

# ஏன் புலப்படவில்லை?

மலபார் மாவட்டத்தைச் சேர்ந்த காங்கிரசல்லாத இதர கட்சிகளைச் சேர்ந்த சட்டசபை உறுப்பினர்கள் கடந்த கிழமையில், சென்னையின் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட நகல், விவாதத்திற்கு வைக்கப்பட்டபோது 'மலபார் மாவட்டம் நகல் திட்டத்தில் புறக்கணிக்கப்பட்டிருக்கிறது' என்று கூறி, விவாதத்தில் கலந்துகொள்ளப் போவதில்லை என்று அறிவித்து வெளிநடப்பு செய்திருக்கின்றனர்.

மலபார் மாவட்டத்தைச் சேர்ந்த எல்லா உறுப்பினர்களும் இரண்டு தினம் முன் கூடி மலபார் மாவட்டத்திற்கான திட்டங்களை வகுப்பதெனவும், அவற்றைத் திட்டக் குழுவிற்கு அனுப்பி வைப்பதெனவும் முடிவு செய்திருக்கின்றனர்.

சென்னை மாநில சர்க்கார், 'முதல் திட்டத்திலேயே தென்னாடு புறக்கணிக்கப்பட்டுவிட்டது; இரண்டாம் திட்டத்திலேனும் நியாயமான பங்கு தரப்பட வேண்டும்' என்ற தென்னாட்டுத் தொழில் அதிபர்கள், அரசியல் வாதிகள், பத்திரிகைகள், பொதுமக்களில் விழிப்புணர்வு பெற்றோர் ஆகிய எல்லோருடைய ஏகோபித்த ஆதரவையும் பின்னணியாகக் கொண்டு திட்டக் குழுவிடம் சுமார் 400 கோடி ரூபாய் பெறுமான நகல் திட்டத்தைத் தூக்கிக்கொண்டு டெல்லிக்குக் காவடி எடுத்தார்கள்.

ஏற்கனவே திட்டமிட்டு மேற்கொள்ளப்பட்ட டெல்லி ஆட்சியாளர்களின் முடிவை திட்டக் குழு அமுல் செய்து, சென்னையின் நகல் திட்டத்தை 200 கோடி ரூபாய் பெறுமானமுள்ளதாக—சரி பாதி அளவுக்குக் குறுக்கி அனுப்பிவைத்தனர்.

தொங்கிய முகத்தோடு திரும்பிய மந்திரி சபைக் குழுவினர், தங்களின் வடநாட்டு எஜமானர்களின் போக்கை வெளிப்படையாகக் கண்டிக்க முடியாதவாறு தாங்கள் பெற்றிருக்கும் பதவி நாற்காலியின் ருசி செய்துவிட்டிருக்கிறது என்பதால், 'கிடைத்தவரை இலாபந்தான்' என்று கூறிக்கொண்டனர்.

சரி பாதியாகக் குறைக்கப்பட்ட திட்டத்தில்; எல்லாத் துறைகளிலும் பின் தங்கிக் கிடக்கும் சென்னை மாநிலத்தின் எல்லா மாவட்டங்களும 'முன்னேறும்' வண்ணம் அமைக்கவேண்டிய 'பொறுப்பு' சென்னை சர்க்காருக்கு ஏற்பட்டது.

தங்கள் நியாயமான கோரிக்கைகளை டில்லி ஆட்சியாளரிடம் பெற்றுக்கொள்ளுகிற ஆற்றலும், நெஞ்சுரமும் இல்லாமையினால், உள்ளதைக் கொண்டு எல்லா மாவட்டங்களின் வளர்ச்சிக்கும் வழி செய்ய வேண்டியவர்களானார்கள்.

அதிலும், அந்த சரிபாதி நகல் திட்டத்தை சட்டசபையில் விவாதத்திற்கு வைக்கும் போதுகூட, 'டில்லியாளர்கள் தங்களுக்குத் தரப்போவது ரூ. 200 கோடியா—அல்லது ரூ. 220 கோடியா,' என்பது சென்னை சர்க்காருக்கு திட்டவட்டமாகத் தெரியாத நிலை தான் இருந்துள்ளது.

இந்த நிலையில் விவாதத்திற்கு வைக்கப்பட்ட நகல் திட்டத்தில்தான், மலபார் மாவட்டப் புறக்கணிக்கப்பட்டிருப்பதாக — அந்த மாவட்டத்தைச் சேர்ந்த காங்கிரசல்லாத சட்டசபை உறுப்பினர்கள் வெளிநடப்பு செய்திருக்கின்றனர்.

"திட்டத்தின் அளவு இவ்வளவுதான் என்பது உறுதியாகவில்லை; 'திட்டம் நகல் அளவில் இருக்கிறதே தவிர, முடிவு செய்யப்பட்டுவிடவில்லை,' என்ற நிலை இருக்கும்போது, உண்மையில் தங்களின் மாவட்டம் புறக்கணிக்கப்பட்டிருப்பதாக மலபார் உறுப்பினர்கள் கருதினால், தங்கள் மாவட்டத்திற்கு நியாயம் கிடைக்க நகல் திட்ட விவாதத்தில் கலந்து கொண்டிருக்கலாமே! அதற்காக, விவாதத்திலேயே கலந்துகொள்ளாமல் வெளியே சென்றதினால் அவர்கள் நோக்கம் ஈடேற வாய்ப்பேது! விவாதத்தில் கலந்துகொண்டு தங்கள் மாவட்டத்தின் நியாயமான கோரிக்கைகளைத் தெரிவித்தும்கூட, அவை, முடிவான திட்டத்தில் இடம் பெறாதிருந்து, அப்போது வெளிநடப்பு செய்திருந்தால் அதில் நியாயமுண்டு; அதற்கிடையில் அவர்கள் வெளியேறியது, காலக்குறி தவறியது,"

என்று, சட்டசபை வட்டாரங்களில் பேசிக்கொள்ளப்படுவதை மலபார் மாவட்ட உறுப்பினர்கள் சிந்திக்காமலிருக்க முடியாது.

மலபார் மாவட்டம் புறக்கணிக்கப்பட்டதா, இல்லையா? — உறுப்பினர்கள் வெளியேறியது சரியா, தவறா? — என்பதை அல்ல, நாம் இங்கு குறிப்பிட விரும்புவது.

தங்கள் மாவட்டம், "ஒரு உருப்பெறாத நகல் திட்டத்தில் புறக்கணிக்கப்பட்டு விட்டதாகக் கூறி, அந்த திட்டம் பற்றிய விவாதத்திலேயே கலந்து கொள்ளாமல் வெளியேறிய மலபார் உறுப்பினர்கள், சென்னை மாநிலம் முழுவதிற்குமாக ரூ. 400 கோடிக்குத் திட்டப்பட்ட நகல் திட்டத்தை ரூ. 200 கோடிக்கு டில்லியாளர்கள் குறைத்த அநியாயத்தை — முதல் திட்டத்தில் மட்டுமின்றி அடுத்தடுத்த திட்டங்களிலும் வடவர் தென்னாட்டைப் புறக்கணிக்கும் கொடுமையை — பாரபட்சத்தை—ஓரவஞ்சனையை ஏன் கண்டிக்க முன்வரவில்லை? மலபார் மாவட்டமும் இணைந்த சென்னையின் திட்டம் பாதியாகக் குறைக்கப்பட்டதினால், மலபாருக்கும் சேர்த்துத்தானே ஏமாற்றமும், நஷ்டமும் ஏற்பட்டுள்ளது? இந்த நஷ்டம் ஏன் அவர்கள் கண்ணுக்குப் புலப்படவில்லை? — என்று நாம் கேட்க விரும்புகிறோம்.

ஆனால், அந்த மலபார் உறுப்பினர்கள், 'பெரும்பான்மையினரான தமிழ் உறுப்பினர்களிலேயே எண்ணற்றோருக்கு அது புலப்படாதிருக்கும்போது எங்களுக்கேன் அது புலப்பட வேண்டும்?'—என்று திருப்பிக் கேட்கக்கூடும்; அந்தக் கேள்விக்கு இன்று மலபார் உறுப்பினர்களைக் குறை கூறுவோர்தான் பதில் தர வேண்டும்!

## மலபார் திட்டங்கள்

சட்டசபை உறுப்பினர்கள் மனு

சென்னை, ஆக. 26—

சென்னை சட்டசபைக்கு மலபார் மாவட்டத்திலிருந்து வந்துள்ள உறுப்பினர்கள் அனைவரும் —காங்கிரஸ் கட்சியினர் உட்பட எல்லாக் கட்சியினரும்—ஒன்று கூடி, சுமார் 100 நிமிட நேரம் விவாதித்து, மலபார் மாவட்டத்திற்கென இரண்டாம் திட்டத்தில் சேர்க்கப்பட வேண்டிய திட்டங்களைக் குறித்து மனு ஒன்று தயாரித்து திட்டக் குழுவிற்கு அனுப்புவதென முடிவு செய்திருக்கின்றனர்.

அறிக்கை தயாரிப்பதற்கென ஒரு குழுவும் அமைக்கப்பட்டிருக்கிறது.

மலபார் மாவட்டத்தைச் சேர்ந்த காங்கிரசல்லாத இதர கட்சிகளைச் சேர்ந்த சட்டசபை உறுப்பினர்கள், சென்னையின் திட்டத்தில் மலபார் புறக்கணிக்கப்பட்டிருப்பதாகக் கூறி சபையிலிருந்து வெளியேறியவர்கள் இன்றும் சபையில் நடைபெறும் இரண்டாம் திட்ட விவாதத்தில் கலந்து கொள்ளவில்லை.

## மக்கள் சபை உறுப்பினர் முறையீடு

புதுடில்லி, ஆக. 25—

மைசூர், கூர்ஜரம், மலபார் ஆகிய வட்டங்களைச் சேர்ந்த மக்கள்சபை உறுப்பினர்கள் ஒன்று கூடி, திட்டக் குழுவிற்கு, தங்கள் வட்டங்களுக்கான திட்டங்களடங்கிய கூட்டறிக்கை ஒன்றினைத் தந்திருக்கின்றனர் என்று தெரிகிறது.

## தென்னாட்டு செல்வம் சீரழியவில்லை?

திண்டிவனத்திற்கருகிலும் பழுப்பு நிலக்கரி கிடைக்கும்?

சென்னை, ஆக. 26—

"திண்டிவனத்திற்கு அருகிலுள்ள ஒரு கிராமத்தில், கிணறு ஒன்று வெட்டும்போது, பழுப்பு நிலக்கரி கிடைத்ததாகத் தகவல் கிடைத்தது; அதுபற்றி விசாரித்தறியுமாறு, நிபுணர்களிடம் சென்னை சர்க்கார் கூறியுள்ளனர்,"

என்று, மேல் (சட்ட) சபையில் அறிவித்த விவசாய அமைச்சர், மேலும் அதுபற்றிய கேள்விக்குப் பதிலளிக்கையில் சொன்னார்:—

"நெய்வேலியில் கிடைப்பதைவிட, இது உயர்ந்த ரகமாக இருக்குமா என்பது தெரியாது; முழு விவரங்களையும் கண்டறியும்படி, நிபுணர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கின்றனர்."

## ஒத்துழைப்பு தேவையாம்!

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தைத் தயாரிப்பதற்கு, தேசிய அபிவிருத்தி சம்பந்தமான பிரச்சினைகளைப் பரிசீலனை செய்து யோசனைகளைத் தெரிவிப்பதில், நாட்டில் உள்ள கல்லூரிகள், சர்வகலாசாலைகள் ஆகியவற்றின் நெருங்கிய ஒத்துழைப்பு தேவையென்று திட்டக் குழுவில் கோரப்பட்டுள்ளதாம்.

## கேட்பாரற்ற வைத்திய முறையாம்!

அங்கீகரிக்க இயலாதாம்!

சென்னை, ஆக. 26—

"ஹோமியோபதி சிகிச்சை முறைபற்றி மாநில சர்க்கார் வேண்டுமானால் சட்டமியற்றிக் கொள்ளலாம்" என்று சென்ற ஆண்டு மத்திய சர்க்காரிடமிருந்து தகவல் வந்ததாயும், ஆனால், 'அப்படி ஒரு சட்டம் தேவை இல்லை' என்று சர்க்கார் கருதுவதாயும் மந்திரி சுப்பிரமணியம் சட்டசபையில் தெரிவித்திருக்கிறார்.

'இந்திய வைத்திய முறைக்கு ஆதரவு அளிப்பது சர்க்கார் கொள்கை அல்லவா?' என்று கேட்டதற்கு, "ஹோமியோபதி முறை இந்திய முறை அல்ல; அது பிறந்தது ஜெர்மனியில்—வளர்ந்தது அமெரிக்காவில்—இப்போது அந்த இருநாடுகளிலும் இதைக் கவனிக்க எவருமில்லாதபோது, இந்தியாவில் மட்டும் இம்முறையை ஏன் கைக்கொள்ள வேண்டும்?" என்று மந்திரி தெரிவித்தார்.

## மத்திய ஆட்சிக்கு சென்னை சிபாரிசு

சட்டசபைகளில் அமைச்சர் அறிவிப்பு

தொழில் தகராறுகள் பற்றிய சமரசங்கள் மட்டுமின்றி கட்டாய மத்தியஸ்தத்தையும் சட்டபூர்வமாக்குவதற்கு மத்திய சர்க்காருக்கு சென்னை சர்க்கார் சிபாரிசு செய்திருக்கிறதாம்; இச்சிபாரிசை மத்திய ஆட்சியினர் ஏற்றுக்கொண்டுள்ளனராம்.

இதை, சென்னை சட்டசபையில் அறிவித்த அமைச்சர் பக்தவத்சலம், இதுபற்றிய மசோதாவை இந்திய சர்க்கார் விரைவில் கொண்டு வருமென்றும், மசோதாவில் சேர்க்கவேண்டிய பிரிவுகள் பல பற்றி சென்னை சர்க்காரை மத்திய ஆட்சி கலந்து செய்யுமென்றும், வேண்டிய சிபாரிசுகளை அப்போது சென்னை சர்க்கார் களித்து அனுப்புமென்றும் குறிப்பிட்டார்.

## 'குறி' போடுவதற்கு வாக்காளர்களுக்குப் பயிற்சி?

நிதிஅமைச்சர் யோசனை கூறுகிறார்

சென்னை, ஆக. 26—

"வாக்குச் சீட்டுக்களிலேயே அபேட்சகர்களின் சின்னங்களுக்கு நேராகக் குறி போடும் முறை பற்றி நகரசபைத் தேர்தல்களில் வாக்காளர்களுக்கு பயிற்சியளிக்க அரசியல் கட்சிகள் உபயோகமுள்ள பிரச்சாரம் செய்யலாம்" என்ற நிதி மந்திரி சுப்பிரமணியம் சட்டசபையில் கூறியிருக்கிறார்.

## 'ஆண்டவனி'ன் சொத்துக்கள்!

'ஒழிக்க நடவடிக்கை?'— சென்னை சர்க்கார் நிலைமை

"தனி நபர்களுக்குச் சொந்தமான கோவில்களில் அரிசனங்களை அனுமதிக்குமாறு நிர்ப்பந்தம் செய்ய இப்போதுள்ள ஆலயப் பிரவேச சட்டப்படி இயலாது" என்று அமைச்சர் பரமேசுவரன் சட்டசபையில் கூறினார்.

"மாதிரி சோஷலிச சமுதாய அமைப்புக்குப் பூர்வாங்கமாக 'ஆண்டவனி'டமுள்ள சொத்துக்களை ஒழிப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?" என்று கேட்டபோது, அமைச்சர், "ஆண்டவன் உட்பட வேறு எவருடைய சொத்துக்கள் பிரச்சினையிலும் குறுக்கிடுவதற்கு சர்க்கார் விரும்பவில்லை" என்றார்.

## 'நெய்வேலியிலா தொழிற்சாலை?'

'தகுந்த இடமென்று தோன்றவில்லையே'

'திட்டம் எதுவும் கிடையாதே'

சென்னை, ஆக. 26—

"மின்சாரக் கருவிகள் செய்யும் தொழிற்சாலையை, நெய்வேலியில் துவங்கும் திட்டம் எதுவும் கிடையாது; நிபுணர்கள் சிபாரிசு செய்யும் இடத்தில்தான் இத்தொழிற்சாலை துவங்கப்படும்; நெய்வேலிதான் அதற்குத் தகுந்த இடமென்று எனக்குத் தோன்றவில்லை,"

என்று, சென்னை மேல்(சட்ட) சபையில் கூறிய அமைச்சர் பக்தவத்சலம், இத்தொழிற்சாலையை ஆவடியில் துவங்குவதற்கு சென்னை சர்க்கார் யோசனை கூறியதென்றும், ஆனால், அங்கு தண்ணீர் வசதி அதிகமில்லை எனத் தெரிவிக்கப்பட்டுவிட்டதாகவும் குறிப்பிட்டார்.

## சென்னை கொள்கை மாறவில்லையாம்!

அமைச்சர் பக்தவத்சலனார் புரியவைக்கிறார்!

'இந்தியில் கலைச் சொற்களைத் திரட்டுவது, பின்னால், இந்தியைப் போதனை மொழியாகக் கொண்டு வருவதற்குத்தான் எனக் கூறப்படுகிறதே," என்று, சென்னை சட்டசபையில் எழுப்பப்பட்ட கேள்வி ஒன்றுக்கு அமைச்சர் பக்தவத்சலம் பதிலளிக்கையில் சொன்னார்:—

"மத்திய ஆட்சியினர் கொள்கை எதுவாக இருந்தபோதிலும், இந்த சர்க்காரின் கொள்கை முன்பே விளக்கப்பட்டுள்ளது; இந்தியை நம்மீது திணிக்கும் பிரச்சினையே கிடையாது; முன்பு வெளியிட்ட கருத்துக்களை இம்மாநில சர்க்கார் மாற்றிக்கொள்ளவில்லை."

## வயது வரம்பு குறையாதாம்

சென்னை, ஆக. 26—

"எஸ் எஸ். எல். சி. தேர்வுகளுக்குச் செல்லும் மாணவர்களின் வயது வரம்பைக் குறைக்கும் பிரச்சினை எழவில்லை," என்று சட்டசபையில் அறிவித்த நிதிமந்திரி சுப்பிரமணியம், "ஓரளவு வயது வந்த பின்னரே சிறுவர்களைப் படிக்க வைப்பது நலமானதென்று நிபுணர்கள் கருதுகின்றனர்" என்று குறிப்பிட்டார்.

## தாலுகா அலுவலகங்களில் தமிழில் நிர்வாகம்

ஊக்கமளிப்பது குறித்து சென்னை சர்க்கார் யோசனை

சென்னை, ஆக. 25—

"எல்லா தாலுகா அலுவலகங்களிலும் தமிழிலேயே அலுவல்கள் நடத்த ஊக்கமளிப்பது பற்றி சென்னை சர்க்கார் யோசித்து வருகின்றனர்,"

என்று சென்னை மேல் சபையில் அமைச்சர் பக்தவத்சலம் அறிவித்துள்ளார்.

"இப்பொழுது திருச்சியில், அலுவல் துறைகள் தமிழிலேயே நடைபெற்று வரும் முறை மன நிறைவைத் தருவதாக இல்லை; அலுவல் துறைகளுக்கு சரியான தமிழ் வார்த்தைகளைக் கண்டுபிடித்துக் கூறுமாறு சர்க்காரால் நியமிக்கப்பட்ட குழுவினரால் தரப்பட்ட 'வார்த்தை'கள் புரிந்து கொள்ளக் கூடியதாயில்லை; புரிந்து கொள்ளும் வகையில் 'வார்த்தை'களைக் கண்டுபிடிப்பது தான் பிரச்சினையாக இருக்கிறது," என்று, மேலும் கூறிய அமைச்சர், "அக்குழுவினர் கூறிய தமிழில், நிர்வாக எஞ்சினீயருக்கு எழுதிய ஒரு கடிதம் வெகுநாட்கள் கழித்து 'டெட் லெட்டர்' அலுவலகத்தை அடைந்துவிட்டது," என்று, உதாரணமாகக் குறிப்பிட்டார்.



# அருப்புக்கோட்டையில் பொதுச்செயலாளர்

## மாபெரும் வரவேற்பும் — பொதுக்கூட்டமும்

★

தி மு கழகப் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், 14—8—55 அன்று அருப்புக்கோட்டைக்கு வருகை தந்தார். நகர் முழுவதும் வரவேற்புத் தட்டிகளாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. மாலை 4 மணிக்கு, பாண்டியன் திடலிலிருந்து நூற்றுக்கணக்கான சைக்கிள்களுடன் தொண்டர்களும், பொது மக்களும் புடைசூழ, பலவித வாத்தியங்கள் முழங்க, இரட்டைக் குதிரை பூட்டிய இரதத்தில் பொதுச் செயலாளர் அமர்த்தப்பட்டு, பல முக்கிய வீதிகளின் வழியாக ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார்.

### நகரசபை வரவேற்பு

திரு. கே. எம். கே. சின்ன மல்லையா தலைமையில் நகரசபை துணைத் தலைவர் எம். எஸ் இராமசாமி அவர்கள் பொதுச் செயலாளர் அவர்களுக்கு வரவேற்பிதழ் வாசித்தளித்தார். ஏராளமான பொதுமக்கள் கூடியிருந்தனர்.

பொதுச் செயலாளர் அவர்கள் வரவேற்புக்குப் பதில் அளிக்கையில், பல கட்சித் தோழர்களைக் கொண்ட அந்நகர சபை தமக்கு வரவேற்பளிக்க முன்வந்த நற்பண்பைப் பாராட்டினார். நகர சபைக்குள்ள அதிகார வரம்பை எடுத்துக் கூறி, இதை நடத்திச்செல்ல கட்சி தேவையில்லை என்பதையும் விளக்கி, நற்பண்புள்ளவர்களாகவும், பொதுமக்களுக்கு சேவை செய்ய தகுதியுள்ளவர்களாகவும் நகரசபையினர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பதையும் விளக்கி நீண்டதோர் சொற்பொழிவாற்றினார்.

### கொடியேற்றல்

தொடர்ந்து ஊர்வலம் வருகிற வழியில் பகுத்தறிவுப் படிப்பகத்தின் சார்பாகக் கழகக் கொடி ஏற்றியும், பஸ் நிலையத் தொழிலாளர்கள் சார்பாகக் கழகக் கொடி ஏற்றியும்வைத்தார். மற்றும் பல சங்கங்களின் சார்பிலும் கழகக் கொடி ஏற்றினார்.

### ஆண்டு விழா:

பின்னர், சௌந்திரபாண்டியனார் நினைவுப்படிப்பகத்தின் ஆண்டு விழாவில் கலந்துகொண்டு நீண்டதோர் உரையாற்றினார்.

### பொதுக்கூட்டம்:

அன்று இரவு 8 மணியளவில், நகர தி மு. கழகச் சார்பில், தோழர் எம். எஸ். இராமசாமி தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. பொதுச்செயலாளர் இரா நெடுஞ்செழியன் அவர்கள் சுமார் $1\frac{1}{2}$ மணி நேரம் கழகக் கொள்கை விளக்கம் தந்தார்.

பொதுச்செயலாளர் அவர்கட்கு, நகர கழகச் சார்பில் கைத்தறித் துண்டு அணிவிக்கப்பட்டதுடன், வரவேற்பு இதழும் வாசித்தளிக்கப்பட்டது.

பஸ் ஸ்டாண்டு தொழிலாளர்கள், மாநில மாநாட்டுக்காக ரூ. 25-ம், வெள்ளைக்கோட்டை பகுத்தறிவு மன்றத்தார் 321 காலணாக்களும் தந்தனர்.

தியாகராய வாலிபர் சங்கம், புதுத்தெரு மறுமலர்ச்சிக் கழகம், சாலியர் பிரச்சாரப் பயிற்சிக் கழகம், நெடும்பாவு நெசவாளர் தொழிலாளர் சங்கம், முன்னேற்ற இளைஞர்கள் சங்கம், பாலையம்பட்டி, கமுதி, கல்லூரணி ஆகிய தி. மு கழகக் கிளைகள் சார்பாகவும் மலர் மாலைகளும், கைத்தறி ஆடைகளும் அணிவிக்கப்பட்டதுடன், வரவேற்பு இதழ்களும் வாசித்தளிக்கப்பட்டன.

பொதுச்செயலாளர் அவர்கள் பேசுகையில், "இன்றைய ஆட்சியானது வடநாட்டின் ஏகாதிபத்தியத்தின் கீழ்தான் நடைபெற்று வருகிறது; அந்த ஆட்சி, வடநாட்டை வளம்பெறச் செய்தும், தென்னாட்டைத் தேய்ந்து போகச் செய்தும் நடைபெற்று வருகிறது," என்று குறிப்பிட்டதுடன், 'இதுவரையில் காங்கிரஸ் சர்க்கார் சாதித்த காரியங்கள்தான் என்ன?' என்றும் வினவினார்.

மேலும் அவர், திராவிட நாடு பிரியவேண்டியதின் காரண காரியங்களை விளக்கியும், திராவிடம் பிரிந்தால் தனித்து வாழ முடியுமா என்ற கேள்விக்குப் பதில் தரும் முறையில் உலகில் தற்போதுள்ள தனி நாடுகளின் விவரங்களை விளக்கிக் கூறி, தனித்து வாழும் நாடுகள் தன்னிறைவு பெற்றே திகழ்கின்றன என்றும் குறிப்பிட்டதுடன், திராவிடத்தில் இந்தி மொழி புகுத்தப்படுவதின் அவசியமின்மையையும் எடுத்துரைத்தார்.

இந்தி மொழி திணிப்புப் பற்றி அவர் தொடர்ந்து பேசுகையில், "தமிழ் மொழியின் மேன்மையையும், அல்லது தமிழ் மொழியின் மேன்மைக்கும் அதிகமாக எந்த வகையாலும் மேன்மையற்ற இந்தி மொழி தமிழ் நாட்டில் கொண்டு வரப்படவேண்டிய அவசியம் ஒரு சிறிதளவு கூட இல்லை" என்றார்.

"தி. மு. கழகம், ஏற்கனவே வெள்ளையனை இந்த நாட்டை விட்டுத் துரத்தி இந்நாடு சுதந்திரம் பெற்றதில் எவ்விதக் கருத்து வேறுபாடும் கொண்டிருக்கவில்லை; ஆனால் நாம் மட்டும் வெள்ளையனிடமிருந்து விடுபட்ட போதிலும் கூட, வடநாட்டினிடமிருந்து திராவிடம் இன்னும் விடுதலை பெறவில்லை. இவையெல்லாம் பொதுமக்களும் பிறகட்சித் தோழர்களும் நன்றாகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஒவ்வொன்றையும் நன்றாக சிந்தித்து, தங்கள் சிந்தனையின் பால் கண்ட முடிவுப்படி அனைவரும் நடந்துகொள்ளவேண்டும்" என்றும் பொதுச் செயலாளர் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

## திருமலைராயன்பட்டணத்தில் வரவேற்பு

18—8—55 மாலை 6 மணியளவில் கடைத்தெருவிலுள்ள தி மு கழகப் பணிமனையில் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் கழகக் கொடியை ஏற்றி, திறந்துவைத்தார். பின்னர், அங்கிருந்து ஓர் மாபெரும் ஊர்வலம் புறப்பட்டு அபிராமி கீழவீதி வந்தடைந்தது. மாலை $6\frac{1}{2}$ மணிக்கு, தோழர் சின்னப்பன் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தலைவர் முகவுரைக்குப் பின், தோழர்கள் உதுமான், சி. ஜம்பு, ஏ எஸ் பாண்டியன் ஆகியோர் தி. மு கழகக் கொள்கைகளை விளக்கிப் பேசினர்.

பின்னர், பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், தி மு. கழக இலட்சியங்களையும், அரசியல், சமுதாயம், பொருளாதாரம் ஆகிய துறைகளில் இயக்க நெறிமுறைகளையும், ஐந்தாண்டுத் திட்டத்தில் தென்னாடு புறக்கணிக்கப்பட்டுள்ளதையும் தக்க சான்றுகளுடன் விளக்கிப் பேசினர்.

பின்னர், கோவா விடுதலைப் போராட்டத்தை ஆதரித்தும், போராட்டத்தில் பலியான தியாகிகளுக்கு அனுதாபம் தெரிவித்தும், போர்ச்சுகீசியரின் அடக்குமுறையைக் கண்டித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பொதுச் செயலாளருக்கு காரை வட்டத்திலுள்ள தி. மு. கழகக் கிளைகள் சார்பில் ஏராளமான கைத்தறி ஆடைகளும், மலர் மாலைகளும் அணிவிக்கப்பட்டன.

நாகூர் தி. மு. கழகச் சார்பில் கைத்தறி ஆடை அணிவிக்கப்பட்டது.

# கழகச் செய்திகள்

### சென்னை 1-வது வட்டம் தி. மு. கழகம்

23—8—55 மாலை 7 மணியளவில், கழகப் பணிமனையில் தோழர் க. பட்டாபி தலைமையில் நடைபெற்ற செயற்குழு கூட்டத்தில், போர்ச்சுகீசிய ஏகாதிபத்தியத்தின் துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும், உயிர் துறந்தும், படுகாயமுற்று வருந்தும் தொண்டர்களுக்கும் அனுதாபம் தெரிவித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதுடன், மற்றும் சில முடிவுகளும் மேற்கொள்ளப்பட்டன.

### வேலூர்—சேலம் தி.மு.க.

21—8—55 இரவு 10 மணிக்கு, வ. உ. சி. வாசகசாலையில் தோழர் வி. ஏ. இராமநாதன் தலைமையில் நடைபெற்ற கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தில், கோவா அடக்குமுறையைக் கண்டித்தும், உயிர் நீத்த அறப்போர் வீரர்களுக்கு வணக்கம் தெரிவித்தும், இந்திய சர்க்கார் உடனடியாகத் தலையிட்டு நடவடிக்கை எடுக்குமாறு கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### திருப்பூர் தி. மு. கழகம்

21—8—55 காலை 10 மணிக்கு, தோழர் முத்தாரத்தினம் தலைமையில், கழகத்திற்கென புதிதாக அமைக்கப்பட்ட புதிய கட்டடத்தில் நடைபெற்ற கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தில், கோவா படுகொலை, இந்திய அரசினரின் கவலையற்ற தன்மை ஆகியவற்றைக் கண்டித்து தோழர்கள் பலர் பேசினர்; கண்டன, அனுதாபத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன; பின்னர், தோழர் ஜி. பராங்குசம் அவர்கள் தந்தையார் இயற்கை யெய்தியமைக்கு அனுதாபம் தெரிவித்துக் கொள்ளப்பட்டது.

### தாத்தையங்கார்பேட்டை தி. மு. கழகம்

23-8-55ல் தி. மு. கழகச்செயற்குழுக் கூட்டம் தோழர் எம். எஸ் என். இராசன் தலைமையில் நடைபெற்றபோது, கோவா அறப்போர் தொண்டர்களை சுட்டுக் கொன்ற போர்ச்சுகீசிய சர்க்காரின் ஆதிக்கப் போக்கைக் கண்டித்தும், உயர்நீத்த தோழர்களுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

* * *

24—8—55 காலை 9 மணிக்கு, சர்வகட்சி தோழர்களும் அடங்கிய மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது.

### வெங்கடேசபுரம் தி. மு. க.

24—8—55 இரவு 9 மணியளவில் நடைபெற்ற கிளைக் கழக உறுப்பினர் கூட்டத்தில், போர்ச்சுகீசிய சர்க்காரின் துப்பாக்கிக் குண்டுக்குப் பலியான கோவா அறப்போர் வீரர்களுக்கு 5 நிமிட நேரம் மரியாதை செலுத்தியபின், போர்ச்சுகீசியரின் துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும், இந்திய சர்க்கார் தக்க நடவடிக்கை எடுக்கக் கோரியும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### வெளியாத்தூரில் தி. மு. கழகக் கொடியேற்று விழா

19—8—55 மாலை 6 மணிக்கு, இராமநாதபுரம் மாவட்டம் கண்டரமாணிக்கத்தை அடுத்துள்ள வெளியாத்தூர் கிராமத்தில், பொதுமக்கள் சார்பில், தி. மு. கழகக் கொடியேற்றுவிழா திரு. ஒ மாயவன் தலைமையில் நடைபெற்றது. தோழர் இராமசாமி கொடியேற்றுவித்தார். தோழர்கள் அப்துல் காசிம், திருநாவுக்கரசு ஆகியோர் கொடியினைப் பற்றி விளக்கிப் பேசினர். அனைவருக்கும் சிற்றுண்டி வழங்கப்பட்டது.

### செங்காட்டுப்பட்டி தி. மு கழகம்

25—8—55 இரவு 8 மணிக்கு, 'அண்ணா அறிவக'த்தில் தோழர் வி. அருணாசலம் தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், கோவா கொடுமைகளைக் கண்டித்தும், விடுதலைப் போரில் உயிர் நீத்த தோழர்களுக்கு வீரவணக்கமும், காயமுற்றவர்களுக்கு பரிவும் தெரிவிக்கப்பட்டதுடன், தக்க நடவடிக்கை எடுக்குமாறு இந்தியப் பேரரசை வற்புறுத்தித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### ஏழுமலை தி. மு. கழகம்

21—8—55ல் இவ்வூர் சினிமா கொட்டகையில் தோழர் இரா. சு. இராமராசன் தலைமையில் நடைபெற்ற கிளைக் கழக உறுப்பினர்கள் கூட்டத்தில், தோழர் கே. ஆனந்த கிருஷ்ணன் ஆண்டுவிழா குறித்து சொற்பொழிவாற்றிய பின், செப்டம்பர் மாதம் மூன்றாவது வாரத்தில் பொதுக் கூட்டம் நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டது. கூட்ட முடிவில் தோழர் செல்வம் அவர்கள் செயற்குழு உறுப்பினர்களுக்கு தேநீர் விருந்தளித்தார்.

### பள்ளிகொண்டா தி. மு. கழகம்

22—8—55 இரவு 8 மணிக்கு தோழர் பி. சி. வைகாதன் தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், தி மு. கழகப் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டமைக்கு தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்களைப் பாராட்டியும், கோவா போராட்டத்தில் உயிர்துறந்த வீரத் தியாகிகளுக்கு அனுதாபம் தெரிவித்தும், கோவா சர்க்காரின் மிருக வெறிச் செயலைக் கண்டித்தும், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### கட்டிமேடு தி. மு. கழகம்

21—8—55 மாலை 6 மணிக்கு, தோழர் பி. எஸ். ஏ. ரகீம் இல்லத்தில், தோழர் வி.ஆர்.எம். சுல்தான் தலைமையில் நடைபெற்ற கழகச் செயற் குழுக் கூட்டத்தில், கிளைக் கழகப் பொருளாளர் தோழர் சொ. வேதையன் வெளியூர் சென்றுவிட்டதால், புதிய பொருளாளராகத் தோழர் எம். ஏ. ஜப்பார் அவர்களை நியமித்தும்; விரைவில் பொதுக்கூட்டம் ஒன்று நடத்துவதெனவும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### துறையூர் தி. மு. கழகம்

18—8—55 இரவு 9 மணிக்கு, கழகக் கட்டிடத்தில், தோழர் என். கே. பாலசுந்தரம் தலைமையில் நடைபெற்ற கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தில், பொதுச்செயலாளர் வரவேற்பு வரவு—செலவு கணக்குகள் சரிபார்க்கப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்டதுடன், தோழர் ஜி. பராங்குசம் அவர்களின் தந்தையார் இயற்கை எய்தியமைக்கு வருத்தம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### தர்மபுரி தி. மு. கழகம்

17—8—55ல், கழக மனையில் நடைபெற்ற கிளைக் கழக செயற்குழுக் கூட்டத்தில், தோழர்கள் த. வே. இராமசாமி, இராசகமலம் ஆகியோர் இயற்கை எய்தியமைக்கு கழகச் சார்பில் அனுதாபம் தெரிவித்துக் கொள்ளப்பட்டது.

இந்தியாவில், 1955-ம் ஆண்டின் முதல் கால் வருடத்தில் மொத்தம் 5.92 கோடி கூவரப் பிளேடுகள் உற்பத்தி செய்யப்பட்டன; 1954-ம் ஆண்டின் கடைசி கால் வருடத்தில் மொத்தம் 4.88 கோடி பிளேடுகளே உற்பத்தி செய்யப்பட்டன.

14—8—55-ல் இயற்கையெய்திய திருநெல்வேலி வண்ணாரப்பேட்டையைச் சேர்ந்த ரிடையர்ட் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் திரு. ஏ. வி. முத்தையா அவர்களின் உருவப் படம்.

## வாலாஜாபாத் இந்துமத பாடசாலை

வள்ளலார் மாணவர் இல்ல ஆட்சி மன்றம் திறப்புவிழா

21—8—55-ல், வாலாஜாபாத் இந்து மத பாடசாலையின் வள்ளலார் மாணவர் இல்ல ஆட்சிமன்ற (பார்லிமெண்ட்) திறப்பு விழா, சென்னை தியாகராயர் கல்லூரி முதல்வர் எம். கே சண்முகம் எம்.ஏ., எல்.டி., அவர்களால் திறந்துவைக்கப்பட்டது. திறப்புவிழாவிற்கு திரு சி. நாராயணசாமி பி.ஏ., பி.எல்., அவர்கள் தலைமை தாங்கினார். ஆட்சி மன்றத் தலைவர், துணைத் தலைவர், அமைச்சர்கள் ஆகியோருக்கு திரு. பி. ஆர். சீராமுலு 'அமைச்ச ஆடை' வழங்கினார். திரு. வி. எம். பி முத்துசாமி அனைவரையும் வாழ்த்திப் பேசியபின், பாடசாலைச் செயலாளர் திரு. வா தி. மாசிலாமணி நன்றி கூறினார். (விழாவின்போது எடுக்கப்பட்ட புகைப் படம் மேலேயுள்ளது.)

# 'இந்தியை கட்டாயமாகத் திணித்தால்...!'

## 'இந்தி தேசியமொழியாக ஒருபோதும் ஆகாது'

டாக்டர் கேஸ்கர் கருத்து

கல்கத்தா, ஆக. 28—

"இந்தி பேசாத மக்கள் மீது இந்தியைக் கட்டாயமாகத் திணிக்க எண்ணினால், இந்தி ஒருபோதும் இந்தியாவின் தேசிய மொழியாக ஆக முடியாது;

"இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள மக்கள், இந்தியைத் தாங்களாகவே முன்வந்து, தேசிய மொழி என்று ஏற்றுக் கொண்டாலன்றி, இந்தி தேசிய மொழியாக உருவாகிவிடமுடியாது;

"இந்த நிலையை இந்தி பெறுவதற்கு, முதலில், வேறு எல்லா வட்டார மொழிகளில் உள்ள நல்லனவற்றையெல்லாம் இந்திமொழி ஏற்றுக்கொள்ள வேண்டும்;

"மேலைநாட்டில் ஜெர்மானிய மொழியும், பிரெஞ்சு மொழியும் எப்படிப் பரஸ்பரம் தொடர்பு கொண்டு வளம் பெற்றனவோ, அவ்வாறே இந்தி மொழியும் இதர இந்திய மொழிகளுடனும் நீடித்த தொடர்பு கொண்டு, வளம்பெற முயற்சிக்க வேண்டும்;

"இது மிகவும் முக்கியமான ஒன்றாகும்; ஏனெனில், வங்காளி, மராத்தி, தமிழ் போன்ற மொழிகளுடன் ஒப்பிட்டால், இந்தி, மிகவும் பின்தங்கிக் கிடக்கிறது; மேலும் ஆங்கிலத்துடன் தொடர்பு கொண்டு அந்த மொழிகள், வளம் பெற்றிருக்கின்றன;

"பிரிவினை மனப்பாங்கை ஒழித்து, 'தேசிய ஒற்றுமை'யைப் பாதுகாக்கக் கூடியவகையில், 'மொழிகளிடை ஒற்றுமை' வளர கருத்தைச் செலுத்தியாக வேண்டுவது அவசியம்; எனவே, எல்லா இந்தியர்களும் மொழிப் பிரச்சினையில் தங்களின் பிற்போக்குக் கருத்துக்களைக் கைவிட வேண்டும்;

"எல்லா இந்தியர்களும் தங்கள் தாய் மொழி, இந்தி மொழி இவை இரண்டும் மட்டுமின்றி வேறு ஒரு இந்திய மொழியையும் கற்றுக்கொள்ள வேண்டும்;

"ஒரு வங்காளிக்கு இந்தியைக் கற்றுக் கொள்வதிலோ, ஒரு இந்தி மொழிக்காரருக்கு வங்காளியைத் தெரிந்து கொள்வதிலோ சிரமமிருக்க முடியாது; ஏனெனில், அனேகமாக பல இந்திய மொழிகளும் ஒரே மூலத்தையுடையவைதான்,"

—என்று, இந்திய மொழிகளிடை ஒரு சுமுகமான நல்லுறவை ஏற்படுத்த வேண்டுமென்னும் நோக்குடன் காட்டப்பட்ட இலக்கிய மாநாடு ஒன்றில் பேசுகையில், மத்திய மந்திரி டாக்டர் கேஸ்கர் குறிப்பிட்டிருக்கிறார்.

# மத்திய பிரதேசத்தில் கொலைகள்

### தினம் இரண்டு விதம் நடைபெற்றுள்ளனவாம்

நாகபுரி, ஆக. 25—

கடந்த 1955 ஜூன் திங்களுடன் முடிந்த ஆறு மாத காலத்தில் மத்திய பிரதேச மாநிலத்தில் 363 கொலைச் சம்பவங்கள் நடைபெற்றிருப்பதாக முதன் மந்திரி ஆர். எஸ். சுக்லா சட்டசபையில் தெரிவித்திருக்கின்றார்.

இந்த எண்ணிக்கைப்படி, தினம் இரண்டு கொலைகள் நடைபெற்றிருப்பதாகக் கணக்கிடலாம் என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

சர்குஜா மாவட்டத்தில்தான் அதிகமான கொலைகள்—அதாவது 34 நடைபெற்றிருக்கிறது. பாஸ்டர் மாவட்டத்தில் 28, நாகபுரி மாவட்டத்தில் 16 (நாகபுரி நகரில் 5 உட்பட), மண்டலா, வார்தாமாவட்டங்களில் தலா ஆறு கொலைகள் நடைபெற்றுள்ளதாம்.

# ரூ. 78 கோடிக்கு இரயில்வே தளவாடம்

### இந்திய நிறுவனங்களுக்கு மட்டும் ரூ. 39 கோடியில் 'ஆர்டர்'

புதுடில்லி, ஆக. 26—

இந்தியக் கம்பெனிகளின் சக்திக்கு எவ்வளவு முடியுமோ அந்த அளவு முழுவதற்குமாக ரூ. 39 கோடி மதிப்புள்ள இரயில் எஞ்சின்கள், கோச்சுகள், வாகன்கள் ஆகியவற்றைச் செய்து தருமாறு இரயில்வே போர்டார், இந்திய நிறுவனங்களுக்கு 'ஆர்டர்' தந்துள்ளனராம்.

அன்றியும், ஜப்பான், ஜெர்மனி, பிரிட்டன் ஆகியவை உள்ளிட்ட 11 அயல் நாடுகளுக்கு இரயில்வே தளவாடங்கள் உற்பத்தி செய்து தருமாறு 'ஆர்டர்' தரப்பட்டுள்ளதாம்.

இவைகள் மூலம் இந்திய இரயில்வேக்களுக்கு மேலும் 700 எஞ்சின்களும், 33,500 கூட்ஸ் வாகன்களும் கிடைக்குமாம்.

# 'நஷ்டஈடு தராமல் வெளியேற்றமாட்டோம்!'

### முதலமைச்சர் தரும் உறுதி

"ஹிராகுட் அணைக்கட்டு பிரதேசத்தில், சுமார் 46 கிராமங்களில் வசித்த 4,000 குடும்பங்கள் அந்தக் கிராமங்களிலிருந்து காலி செய்யப்பட்டிருக்கின்றன;

"சுமார் 1,111 குடும்பங்களுக்கு நஷ்ட ஈடு ஏற்கனவே வழங்கப்பட்டுவிட்டது; இதரவை கவனிக்கப்படுகின்றன; எந்த ஒரு குடும்பமும், நஷ்டஈடு தரப்படாமல் வெளியேற்றப்படமாட்டாது,"

என்று, ஒரிசா சட்டசபையில், எதிர்க்கட்சியினர் கேள்விக்குப் பதிலளிக்கையில் முதலமைச்சர் குறிப்பிட்டிருக்கிறார்.

# ஏன் ஆயிற்றோ?

புதுடில்லி, ஆக 26—

"தென்னாட்டில் ஒரு அலுமினியம் தொழிற்சாலை நிறுவுவதற்கு சென்னை சர்க்கார் திட்டமொன்று சமர்ப்பித்திருக்கின்றனர்"

என்று, மக்கள் சபையில், திட்ட இலாகா துணை அமைச்சர் எஸ். எஸ். மிஸ்ரா அறிவித்துவிட்டு மேலும் சொன்னார்:—

"அத்தொழிற்சாலை 30 டன் உற்பத்திச் சக்தி கொண்டதாகவும், மூலதனச் செலவு ரூ 8,37,00,000 மாகவும், ஆண்டிற்கு ரூ 61,04,000 பராமரிப்பு செலவு உள்ளதாகவும் இருக்கும்."

## நோக்கம் இல்லையாம்!

சென்னை, ஆக. 27—

"எட்டு, ஒன்பது, பத்தாவது வகுப்புகளில் கல்வி பயிலும், ஏழை மாணவர்களுக்கு பூரண 'இலவச சம்பளச் சலுகை தரும் நோக்கம் இப்போது சர்க்காருக்கு இல்லை," என்று மேல் (சட்ட) சபையில் மந்திரி சுப்பிரமணியம் தெரிவித்திருக்கிறார்.

# மாநில மாநாட்டு நிதியளிப்பு விழா

### சிதம்பரம்

டவுன் ஹால் மைதானத்தில் 30—8—55 மாலை 6 மணிக்கு

தலைவர்: பொன். சோக்கலிங்கம்

பேசுவோர்:
சி. என். அண்ணாதுரை
தில்லை-வில்லாளன்
இரா. சாம்பசிவம்
இரேத்தின. பாலகுருசாமி

தென்னாற்காடு மாவட்டத்தில்

# அண்ணாதுரை

### சுற்றுப்பயணம்

31-8-55 காலை: திட்டக்குடி—திருமணம்;
மாலை 6 மணிக்கு: திட்டக்குடி—பொதுக் கூட்டம்.

தி. மு. க. பொதுச்செயலாளர்

# இரா. நெடுஞ்செழியன் அம்மாசத்திரம் வருகை

30—8—55 செவ்வாய் மாலை, அம்மாசத்திரம் கடை வீதியில், தோழர் கே. கே. நீலமேகம் தலைமையில் தி. மு. கழகப் பொதுக்கூட்டம் நடைபெறும். பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், தோழர் கே. ஆர். இராமசாமி ஆகியோர் பேசுவர்.

### சொற் பயிற்சிக் கூட்டம்

31—8—55 இரவு 7 மணிக்கு சென்னை, எண் 19 ஏ, வேலாயுத பாண்டியன் தெருவில் (மாடியில்) சென்னை 3-வது வட்ட தி. மு. கழகச் சார்பில், தோழர் சேதுராசன் தலைமையில், 'நமது எண்ணம்' என்னும் பொருள் பற்றி உறுப்பினர்கள் பலர் பேசுவர்.

### திருமணம்

31—8—55 காலை 9½ மணிக்கு, சென்னை, முத்தியாலுப்பேட்டை, எண் 33, பவழக்காரத் தெருவிலுள்ள வணிக வைசிய கலியாண மண்டபத்தில், தோழர் டி. கோவிந்தசாமி — தோழியர் சரஸ்வதி திருமணம் நடைபெறும்.

## ஆந்திராவில் இரு சிமெண்ட் உற்பத்திச்சாலை

### ரூ. 1 கோடி முதலீடாம்!

"கர்னூல் மாவட்டத்தில் பணயம் ரிசர்வ் காட்டிலும், குண்டூர் மாவட்டத்தில் மச்சேர்லாவிலும் ஒவ்வொரு சிமெண்ட் உற்பத்தி சாலை ஏற்படுத்த அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது; இவைகளுக்கு ரூ. 1 கோடி மூலதனமாகப் போடப்பட்டுள்ளது" என்று, அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி அறிவித்துள்ளார்.

# உத்தேசமில்லை?

எர்ணாகுளம், ஆக. 26—

"தமக்குத் தெரிந்தவரை, திருகொச்சி மந்திரி சபையில் தமிழர் ஒருவருக்கு இடம் தரும் உத்தேசம் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை," என்று அகில இந்திய காங்கிரஸ் செயலாளர் மாதவன் நாயர் தெரிவித்திருக்கிறாராம்.

# பிரகாசத்திற்கு 'பென்ஷன்'

நெல்லூர், ஆக. 28—

ஆந்திர முன்னாள் முதன் மந்திரியான டி. பிரகாசத்திற்கு மாதந்தோறும் ரூ. 750 தருவதுடன், புதிய கார் ஒன்றும் வாங்கித் தருவதென ஆந்திரப் பிரதேச காங்கிரஸ் முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

காங்கிரசின் நடைமுறை ஆண்டு வரவு—செலவுத் திட்டத்தில் இதற்கென ரூ. 10,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது.

# இலங்கை இந்தியர் பிரச்சினையில் 'நெருக்கடி கட்டம்?'

## வாக்குறுதிகள் மீறப்பட்டதைப் புள்ளி விவரங்கள் தெளிவாக்குகின்றன

### தங்கள் விருப்பம்போல் முடிவுசெய்ய இலங்கை முடிவு

"இலங்கை இந்தியர் பிரச்சினையில், இலங்கை சர்க்கார் பின்பற்றி வரும் போக்கு அடியோடு மாறுவிடில், இருநாட்டு பிரதமர்களும் மீண்டும் சந்திப்பதில் எவ்வித பலனும் ஏற்படாது," என்று இலங்கைக்கு தெரிவிக்கப்பட்டுள்ளதாம்

குடி உரிமைச் சட்டத்தை இலங்கை சர்க்கார் நியாயமாக அமுல் நடத்தும் என்று இந்திய சர்க்கார் எதிர்பார்த்தனராம்; 1½ இலட்சம் பேர் இந்தியக் குடிமக்களாகவும், 8½ இலட்சம் பேர் இலங்கைக் குடி மக்களாகவும் நிர்ணயிக்கப்படுவர் என்றும் இந்தியா எதிர்பார்த்ததாம்.

முன்னாள் பிரதமர் சேனநாயகா கூட, 4 இலட்சம் இந்தியர்களுக்கு இலங்கைக் குடி உரிமையும், 2½ இலட்சம் பேருக்கு நிரந்தரக் குடியிருப்பு அனுமதியும் தருவதாக உறுதி கூறியிருந்தாராம்; ஆனால், இப்போது, 50,000-பேருக்கு மட்டுமே இலங்கைக் குடி உரிமை வழங்க பொறுப்பு வாய்ந்த இலங்கைத் தலைவர்கள் முயற்சிப்பதாகக் கூறப்படுகிறது.

1954 வரையில், 32,988 பேர்களே இலங்கைக் குடிமக்களாகப் பதிவு செய்யப்பட்டனர்; 88,500 பேர்களின் மனுக்கள் நிராகரிக்கப்பட்டன; ஆனால், 1954–55 ஜூன் வரை 807 பேர்கள் தான் பதிவு செய்யப்பட்டனர்; 60,614 பேர்களின் மனுக்கள் நிராகரிக்கப்பட்டன.

'இந்தியக் குடிஉரிமையை ஏற்போருக்கு தக்க உதவிகள் அளிக்கப்படும்,' என்ற வாக்குறுதியையும் இலங்கை மீறியுள்ளதாம்.

'55 வயது வரை இலங்கையில் வசிக்க அனுமதிக்கப்படுவர்' என்ற வாக்குறுதியையும் புறக்கணித்துவிட்டு, இப்போது, இருஆண்டிற்கே அனுமதி தரமுடியுமென்றும், விருப்பமிருந்தால்தான் அதை நீடிக்கக்கூடுமென்றும் இலங்கை கூறுகிறதாம்.

இலங்கைஇந்தியர் பிரச்சினையை தங்கள் விருப்பம்போல் தீர்த்துக் கொள்ள உறுதி கொண்டிருப்பதாகவே இந்நடவடிக்கைகள் தெளிவுபடுத்துகின்றனவாம்.

அவ்வப்போதுள்ள நிலைமைகள் பற்றி, இந்திய சர்க்கார் சென்னை சர்க்காருக்கு தகவல்கள் தருவதாகக் கூறப்படுகிறது.

# 'அறப்போரினாலேயே ஒழிப்போம்'

### இரு முரண்பாடான ஆயுதங்கள் பற்றி நேரு

கௌஹாத்தி, ஆக. 28—

"பலாத்காரமற்ற அறப்போர் மூலமே போர்ச்சுகீசியரின் ஆதிக்கத்தை ஒழித்துவிட முடியும்; 'போலீஸ் நடவடிக்கை'யும் எடுக்க வேண்டுமென்று கோரிக்கைகள் எழுப்பப்படுகிறது; 'சத்தியாக்கிரக'மும் பிரக்கியும் ஒன்றுக்கொன்று முரண்பாடான ஆயுதங்கள்; இவற்றை ஒன்றாக இணைப்பதினால், இவ்விரண்டில் எந்த ஆயுதத்திற்கும் வெற்றி கிடைக்க முடியாது,"

என்று, பிரதமர் நேரு, பொதுக் கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

# 'அனுபவம் பெறாத இளைஞர்களையா அனுப்புவது?'

சென்னை, ஆக 27—

"மருத்துவக் கல்வி முடிந்த உடனேயே மாணவர்கள் கிராமங்களுக்குச் சென்று சேவை செய்யவேண்டுமென்று சிலர் கூறுவது விரும்பத் தக்கதல்ல; மருத்துவ சிகிச்சையில் போதிய அனுபவம் பெறாத இளைஞர்களை உடனடியாகக் கிராமங்களுக்கு அனுப்புவதால் எவ்வித பலனும் ஏற்படாது; 'பட்டம்' பெற்ற மாணவர்கள் 5 அல்லது 10 ஆண்டுகளுக்கு அனுபவம் பெற்ற பிறகு கிராமங்களுக்குச் சென்று சேவை செய்தால், கிராம மக்களுக்குப் பலன் உண்டு."

என்று, மருத்துவக் கல்லூரியில், மருத்துவக் கண்காட்சியைத் திறந்துவைத்துப் பேசுகையில் செட்டி நாட்டு அரசர் முத்தையா குறிப்பிட்டுள்ளார்.

# 'தரிசனம்' கிடைக்கு முன்பே...!

பத்ராசலம், ஆக. 28—

புதிதாக மணமான 16 வயதுப் பெண், கணவனுடனும், உறவினர்களுடனும் பத்ராசலத்தில் உள்ள 'இராமபெருமானை'த் தரிசிக்கச் சென்றுகொண்டிருந்தார்.

தனுகு என்ற கிராமத்தைச் சேர்ந்த அவர், கோதாவரி நதியில் படகில் சென்று கொண்டிருக்கும் போது வழுக்கி விழுந்து, நீரில் மூழ்கி, பரிதாபகரமாக வாழ்க்கையை முடித்துக்கொண்டிருக்கிறார்.

'இராமபிரானை'த் தரிசிக்கு முன்பே 'மோட்சலோகத்'திற்கு அழைப்பு கிடைத்துவிட்டது போலும்!

சுகாதாரத் திட்டங்களுக்கு

# ரூ. 700 கோடி

புதுடில்லி, ஆக 28—

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 700 கோடி செலவழிக்கக் கூடிய சுகாதாரத் திட்டங்களைச் சேர்க்கும்படி திட்டக் குழுவிற்கு இந்திய வைத்திய சங்கம் சிபாரிசு செய்துள்ளதாம்.

## 'இராமத் தூதுவர்'களை நன்கு நடத்துவார்களாம்!

'நன்கு நடத்துகிறோம்,' என்று அமெரிக்க சர்க்கார் உத்திரவாதம் அளித்ததின்மீது, இளம் பிள்ளைவாதத் தடுப்பு மருந்து தயாரிப்பு சம்பந்தமான ஆராய்ச்சிக்குத் தேவையான 'மாதிரி குரங்கு'களை ஏற்றுமதி செய்ய இந்திய சர்க்கார் அனுமதித்துள்ளனராம்.

## பிரதமர் நேருவுக்கு ஜப்பான் அழைப்பு?

ஜப்பான் சர்க்கார், பிரதமர் நேருவை தங்கள் நாட்டிற்கு வருகை தருமாறு அழைப்பு அனுப்பியிருப்பதாகக் கூறுவது பற்றிய தகவல்கள் எதுவும் அந்நிய நாட்டு இலாகாவுக்குக் கிடைக்கவில்லையாம்.

# ஐ.நா.-வுக்கு செஞ்சீனா?

ஐ. நா. சபையில் சீனா இடம் பெறுவதற்கான நடவடிக்கைகளை, வரும் ஐ. நா. சபைக் கூட்டத்தில் மேற்கொள்ளுமாறு, பிரிட்டிஷ் பிரதமர் அந்தோனி ஈடனுக்கு, சீனக் கம்யூனிஸ்டு கட்சியின் மத்திய குழு செய்தியனுப்பியிருப்பதாகத் தெரியவருகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

